5.00 p.m. புதிதாக அமைச்சர்கள் எல்லாம் வந்திருக்கிறார்கள். பழைய அமைச்சர்களும் இருக்கிறார்கள். முன்னமே அவர்கள் நடத்திய காரியத்தை எல்லாம் பார்த்துக் கொண்டு இருந்தோம். புதிய அமைச்சர்களைத் தனிப்பட்ட முறையில் வரவேற்கிறேன். அதுவும் எங்கள் ஜில்லாவிலிருந்து ஒரு அமைச்சர் வந்திருக்கிறார்கள். அவருக்கு நான் தனி வரவேற்பு கொடுக்கவேண்டியது அவசியம் என்று கருதுகிறேன்.

**THE HON. SRI R. VENKATARAMAN** : சொந்தக்காரர் போலிருக்கிறது.

**SRI V. K. PALANISWAMY GOUNDER** : சொந்தக்காரர் ஆனபடியால் வரவேற்கவேண்டும் என்பதில்லை. சொந்தக்காரர்கள் எத்தனையோ பேர்கள் விரோதிகளாக இருக்கிறார்கள். அண்ணன் தம்பிகள் கூட விரோதிகளாக இருக்கிறார்கள். நான் கோயம்புத்தூர் ஜில்லாபோர்டில் 12 வருஷம் இருந்தேன். அடுத்தபடி தலைவராக வந்து 3 வருஷம் பணியாற்றினார்கள் அவர்கள். அதற்கு வேண்டிய ஒத்தாசையும் செய்தேன். அவர்கள் நன்றாக நடந்து கொள்வார்கள் என்பது எனக்கு நன்றாகத் தெரியும். அவரையும் நான் வரவேற்கிறேன்.

என் கையெழுத்திலே பழனிசாமி என்றுதான் போடுகிறேன். பழனிசாமி கவுண்டர் என்று போடுவதே இல்லை. கூப்பிடுகிறவர்கள்தான் அப்படிக் கூப்பிடுகிறார்கள். கொஞ்சம் வயதிலே அதிகமானதாலே, அந்தக் காலத்திலே ஜாதிப்பேரைச் சேர்த்துக் கூப்பிட்டுப் பழக்கமாகி விட்டதால், அதே போல் இப்போதும் கூப்பிடுகிறார்களே தவிர, இதுவரை கவுண்டர் என்று நான் கையெழுத்து போட்டதே இல்லை. அப்படிக் கூப்பிடுவதையும் விரும்புவதில்லை. அதெல்லாம் இருந்தால்தான் இன்னொரு ஜாதிப்பேரை சொல்லிக் கூப்பிடும் சந்தர்ப்பம் வருகிறது. நான் அதை விரும்புவதும் இல்லை. நான் உங்களுக்குச் சொல்லுவது இந்த உபதலைவர் ஆனபிறகு கட்சிக் கண்ணோட்டம் கூடாது என்று எனக்குத் தெரியும். ஆகவே பாரபட்சம் இல்லாமல் நடந்து கொள்வேன் என்று உறுதி கூறுகிறேன். ஏற்கனவே 28 மாதங்களாக உபதலைவராக இருந்து இருக்கிறேன். நான் அந்த மாதிரி பாரபட்சமில்லாமல் நடந்து கொள்ளுவதற்கு துணைபுரிய வேண்டும் என்று கேட்டுக் கொண்டு என்னை ஏகமனதாக உபதலைவராக தேர்ந்தெடுத்ததற்காக மறுபடியும் நன்றி தெரிவித்துக் கொள்கிறேன். தலைவரவர்களுக்கு பிரத்யேகமாக நன்றி தெரிவிக்க வேண்டியது எனக்கு அவசியம். காரணம் இவ்வளவு காலமாக உபதலைவராக இருந்தபோது கொஞ்சம்கூட கோணாமல் ஒற்றுமையாய் நடந்துகொண்டு வந்தோம். அவர்கள் என்னிடம் ரொம்ப பக்ஷமாய் நடந்து கொண்டுவந்தார்கள். இனியும் அப்படியே நடப்பார்கள் என்பதில் சந்தேகம் இல்லை. அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொண்டு சபைக்கும் நன்றி தெரிவித்துக் கொண்டு என் வார்த்தையை முடித்துக் கொள்கிறேன்.

**MR. CHAIRMAN** : The House will now adjourn and meet again **at 3 p.m. on** Friday, the 4th May 1962.

The House then adjourned

IX.—PAPER LAID ON THE TABLE OF THE HOUSE.

* 72. *Notification issued with G.O. Ms. No. 978, Home, dated 12th March 1962 regarding the reduction of the tax by half under the Madras Motor Vehicles Taxation Act, 1931, in respect of lorry* MDJ 1358 belonging to the St. Mary's High School and Orphanage, *Vellore, registered in the name of Rev. Mother Superior, St. Mary's Convent, Vellore.*

---

* Laid on the table of the House on 26th April 1962.